ஓம்
சிவமயம்.

இராமநாதபுர மாவட்டம் திருப்பத்தூர் வட்டம் நெற்குப்பை

அருள்மிகு அழகிய நாச்சியம்மன்

# கும்பாபிஷேக மலர்



திருப்பணி மலர் கும்பாபிஷேக கமிட்டியார் சார்பில்

திரு. அ. குமரப்ப செட்டியார் அவர்களால் பிரசுரிக்கப்பட்டு

திரு. லெ. ராம. லெ. இராமனுதன் செட்டியார் அவர்களால்

நிகழும் காளயுக்தி வருடம் சித்திரை மாதம் 10-ம் நாள்
(23-4-78) ஞாயிற்றுக்கிழமை
கும்பாபிஷேகதினத்தன்று வெளியிடப்பட்டது.

தொகுத்தோன்: H. B. முத்துகிருஷ்ண பாரதி, நெற்குப்பை

அருள்மிகு அழகிய நாச்சியம்மன் திருப்பணிக் கமிட்டியார்
நெற்குப்பை




உ

# ஸ்ரீ அழகிய நாச்சியார்மன் கோயில் வரலாறு

அண்டங்கள் அனைத்தும் சிவ சக்தி மயம். தீ எரிகிறது. காற்று அடிக்கிறது, மழை பெய்கிறது, பூமி சுழல்கிறது, பருவம் மாறுகிறது, அண்டங்கள் இயங்குகின்றன. உயிர் வாழ்வன தோன்றி மறைகின்றன. இவையனைத்தும் சக்தியின் மூலமே, சிவம் ஆனந்தத் தாண்டவம் ஆடுகின்றார். மக்கள் அனைவரும் அதன் மயம். பிரபஞ்சம் முழுதும் மாயா சக்தியின் சொரூபம். உலகத்தைப் பற்றிய உண்மையை விளக்குவது மாயை. யாண்டும் அழியாது, நித்தியமாய், இருப்பது பரம்பொருள். அக்னியில் உஷ்ணம் போன்று என்றும் பிரியாது. இப் பரம்பொருளைச் சார்ந்திருக்கும் ஆற்றலுக்குச் ''சக்தி'' அல்லது ''மாயை'' என்று பெயர். சக்தியின் திருவிளையாடல், அணு முதல் அண்ட பகிரண்டம் வரை எங்கும் பரவியுள்ளது. இப்பூமியைப் போன்ற எண்ணற்ற கிரகங்கள் ஒன்றையொன்று அதிவேகமாகச் சுற்றிக் கொண்டு வருகின்றன.

சக்தியின் வன்மையால் நிலை குலையாது ஒழுங்காக அவைகள் சுழல்வதும் பராசக்தியின் இத்தகு திருவிளையாட்டும் மனதுக்கு எட்டாத வண்ணம் அகண்டாகாரத்தில் விரிந்தோடுகின்றது.

அன்பு வடிவமான பரம்பொருள் இயங்கும் இத்தன்மையே ''சக்தி,'' அவளே உலகத்தாய் ஆகின்றாள்.

குழந்தையை பெற்றபின் தாய் வேறு, பிள்ளைவேறாக ஆகிவிடுகின்றனர். ஆனால் அண்ட சராசரங்களையும் ஈன்ற நாயகி என்றைக்கும் அவைகளினின்றும் விலகினவள் அல்லள். அவளே உலகனைத்துமாய் எங்கும் வியாபித்து நிற்கிறாள். உலகம் (பிரபஞ்சம்)யாவும் அவள் மயமே.

தோற்றம் — மறைவின் மூலம் இறைவி, மாந்தர்க்கு இன்ப நுகர்ச்சியும், வீடுபேறு அளிப்பதுமாகும்.

அன்னையை ''புக்தி, முக்தி, பிரதாயினி' என வேதம் கூறுகின்றது. அவளே சகல சுகங்களையும், மோக்ஷத்தையும், கொடுப்பவள். அவா இருக்கும் வரை அதற்கேற்ப பிறவிகளைக் கொடுக்கிறாள். முக்தி வேண்டுவோர்க்கு சிவகதிக்கு

வழி காட்டியுமாகிருள் வேண்டியவர்க்கு வேண்டியதை வேண்டியாங்கு வகுத்தருளு கின்ற தன்மையால் அகில அண்டங்களுக்கும் அவளே அன்னையும் ஆகின்ருள் அன்ருே!

உலகத்தில் அவ்வப்போது தீயனவற்றை அழித்து, நல்லனவற்றை நிலை நாட்ட இறைவி பல வடிவங்கள் தாங்கி பல நாமங்களுடன், தோற்றமளிக் கின்ருள் என சாஸ்திரம் கூறுகின்றது. புராணங்கள் புகல்கின்றன. எத்தகு நிலையிலும் யாவரேயாயினும் அம்பிகையின் கருணையால் இரட்சிக்கப்படுகின்றனர்.

நல் வாழ்விலும், சமூகத்தின் நடைமுறையிலும், சிறப்புற ''துர்கா தேவி'' யாய் விளங்குகின்ருள். செல்வம் பெருக்குவதற்கு ''திருமகளாய்'' (மஹாலெக்ஷ்மி) திகழ்கின்ருள். அறிவு ஞானங்கள் புகட்ட (சரஸ்வதி) கலைமகளாய் விளங்கு கின்ருள். உலகத்து ஐம்பெரும் தொழில்களான, படைத்தல், காத்தல், அருளல், மறைத்தல், அழித்தல் ஆகியன இறைவியின் செயலே.

பூவுலவாசிகளாகிய மனிதர்களும், பொன்னுலக வாணராகிய தேவர்களும், இறவா பெருமையுடைய முனிவர்களும் இறைவியின் பொன்னடியை போற்றித் துதிக்கின்றனர். அத்தகு பேரழகியான திரிபுர சுந்தரியே. நாம் வணங்கும் அருள் மிகு அழகிய நாச்சியம்மன் ஆவாள்.

## நாகர் வரலாறு

முன்னொரு சமயம் பெரும் தபசு செய்துகொண்டிருந்த சுவேத மகரிஷி எனும் முனிவர் கழுத்தில் பரீக்ஷித்து மகாராஜா. ஒரு பாம்பை மாலையாக அணி வித்து விட்டு, போயினன். இதன் காரணமாய் பரீக்ஷித்து மகாராஜா ''சர்ப்பம்'' தீண்டி இறக்க சாபம் ஏற்பட்டது. பரீக்ஷித்து மகாராஜாவின் மகன் ''ஜனமே ஜயன்'' என்பான். நடாத்திய ''சர்ப்ப யாகம்'' காரணமாய் மூவுலகத்திலுள்ள சகல சர்ப்பங்களின் உயிர்களுக்கும் ஆபத்து ஏற்பட்டது. ஆதிசேஷன், கார் கோடகன், முதலிய அஷ்ட நாகங்களும் தேவியைப் பிரார்த்தித்து சரணம் புகுந்தன.

இறைவியும் தன் கருணையினல் சர்ப்பங்களை இரட்சித்தும், பாவ நிவர்த்தி செய்தும், எங்கும் மங்களத்தை நல்கினள் என்று ஸ்ரீ தேவி பாகவதம் முதலான புராணங்கள் கூறுகின்றன. இவ்வண்ணம் திரிபுர சுந்தரியாம். அழகிய நாச்சியம்மன் கோயில்களில் நாகராஜனுக்கும் ஒரு சன்னதி ஏற்பட்டது,

# சரித்திரச் சான்றுகள்

12-ப் நூற்ருண்டில் பாண்டியர்களின் மாகாணத் தலைநகரங்களில் ஒன்ருகிய பொன்னமராவதி இருந்தது. அங்கு மூன்றடுக்கு அரண்மனை இருந்ததாகவும் இலங்கை மகாவம்சம் எனும் நூலும், பாண்டியர் வரலாறும், கூறுகின்றது. பாண்டிய அரசுரிமைக்காக போராடிய பராக்கிரம பாண்டியன் சிங்களப் படை உதவியுடன் சோழப் பேரரசன் குலசேகரனுடன் போரிட்டான். பராக்கிரம பாண்டியன் இறந்த பின்னர் விரபாண்டியன் சிங்களப் படைத்தலைவர்களான ஜகத்விஜயன். இலங்காபுரன், ஆகியோர் படை உதவியோடு இருமுறை பொன்னமராவதியிலும், கிழா நிலையிலும், சோழனுடன் போரிட்டான். முதல் போரில் பொன்னமராவதியில் உள்ள மூன்றடுக்கு அரண்மனை, எரியூட்டப் பட்டும், சோழப்படை நிர் மூலமாக்கப்பட்டது. 13-ம் நூற்ருண்டின் தொடக்கத்தில் பொன்னமராவதி பாண்டிய பேரரசு ஆளுகைக்குட்பட்டது முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் (கி.பி.1216) ''மழவராயன்'' என்ற சிம்மாஸனமும் பள்ளியறைக் கூடமும், பொன்னமராவதியில் இருந்ததாக திருக்கோளக்குடி கல்வெட்டு கூறுகிறது.

பாண்டிய மன்னனின் பரம்பரையில் நேதிராஜ பாண்டியன் என்பான் பாண்டிய அரசின் குறுநில மன்னனுய் அரசு செலுத்தி பொன்னமரனுடன் போர் செய்ய வேண்டி மானுமதுரைப் பகுதியிலிருந்து இரு நூறு மறவர் குடிகளை குடியேற்றியதாக செப்பேடு கூறுகிறது.

நேதிராஜ பாண்டியன் மறவர்குல மங்கையை மணந்து அவள் மூலம்பெற்ற பிள்ளையிடம் பொன்னமராவதியையும் மற்ற பகுதிகளையும் ஒப்புவித்தான். பின்னர் நேதிராஜ பாண்டியன் மக்களுள், வீர காங்கேயன், பாகப்பிரிவினையாய், நெற்குப்பையையும் அதன் பகுதியையும் அடைந்தான்.

பல நூற்ருண்டுகளாக, பிரமலை நாட்டுப் பொன்னமராவதி, ராஜராஜ பாண்டிய நாட்டின் பகுதியாய் இருந்தது. பிரிவினைக்குப்பின், வடபால் (VADAPARU) தென்பால் (TENPARU) என்றும் வழங்கப்பட்டது.

நெற்குப்பை பகுதியை பாகமாக அடைந்த வீரகாங்கேயன், பொன்னமராவதியில் உள்ளவாறே பிடாரி அம்மன் கோயிலும், தன் பரம்பரை குலதெய்வமான அருள்மிகு அழகிய நாச்சியம்மன் என்னும் திரிபுர சுந்தரி கோயிலை தன் தாய் மாமன்மார், உறவினர் உதவியுடன் எழுப்பியும், மேற்படி அம்மன் கோயிலில் சேவுக மூர்த்தி முதலான தெய்வங்களையும், அமைத்து தனக்கு பாகப்பிரிவினையால் கிடைத்த அழகிய நாச்சி உத்ஸவ விக்ரகத்தைக் கொண்டு திருவிழா நடத்தியும் தன் மாமன்மார் வகையருக்களின் உதவியால் அருள்மிகு மனமொத்த கண்டீஸ்வரர் கோயிலை கட்டுவித்தும் பல திருவிழாக்கள் நடத்தியும், ஏனைய ஸ்தலங்களையும், பராமரித்தும் வந்தனன்.

இன்றும் பொன்னமராவதியில் உள்ள அருள்மிகு அழகிய நாச்சியம்மன் தெற்கு வாசல் நெற்குப்பையைச் சேர்ந்தது. என்றும் கோயில் விபூதி மரியாதைகள் வழங்கும்போது முதலாவதாக பொன்னமராவதி நாடு என்று கூப்பிடப் பெறுவதும் குறிப்பிடத்தக்கது.

தன் தாய் மாமன் வகையருக்களுக்கும் அருள்மிகு மாணிக்க நாச்சியம்மன் கோயிலும், கண்மாய், குளம், நிலப்பகுதிகளையும் சாசனம் செய்து கொடுத்தனன் என வரலாறு உணர்த்துகிறது.

பின்னர் இப்பகுதியில் குடியேறிய பலதுறை மக்களும் வல்லத்துச் சோழர்களும், தன வைசிய மரபினரும் ஏனையோரும், அம்பாளின் கருணைக்கு பாத்திரர்களாகி போற்றிப் பணிந்து வருகின்றனர்.

இக்கோயிலை சுமார் 40 வருடங்களுக்கு முன்னர் நெற்குப்பை தனவைசிய பெரும் குடியினரான திரு. ப. ராம. லெ. லெட்சுமணன் செட்டியார் அவர்களின நன் முயற்சியால் ''பாலாலயம்'' அமைத்தும் சுற்று மதில் சுவர் எழுப்பியிருந்ததையும் சிறந்த பண்பும் உயர்ந்த உள்ளமும் நிறைந்த அ. பழ. அ. குமரப்ப செட்டியார் அவர்களின் நன் முயற்சியின் பயனாலும், பல பெருங்குடி மக்களின் பேருதவியினாலும், திரு. அ. பழ. அடைக்கப்ப செட்டியார் மீனாக்ஷி ஆச்சி அவர்களின் மக்கள் பேருதவியாலும் நிறைவு செய்யப் பெற்று திரு. லெ. ப. அண்ணாமலை செட்டியார் அவர்கள் திருப்பணியை கண்காணித்துப் பூர்த்தி செய்யப்பெற்று உயர்திரு. அ. பழ. அடைக்கப்ப செட்டியார் குமாரர் குமரப்ப செட்டியார் அவர்களால் நிகழும் மங்களகரமான காளயுக்தி வருடம் சித்திரைத் திங்கள் 10ம் நாள் (23—4—1978) ஞாயிற்றுக் கிழமை சுக்கிலபக்ஷம் பௌர்ணமிதிதியும் சுவாதி நட்சத்திரமும் சித்த யோகமும் கூடிய சுபயோக சுபதினத்தில் காலை மணி 9-15 க்கு மேல் 10-30 க்குள் மிதுன லக்கினத்தில் ஸ்ரீ அழகிய நாச்சியம்மனுக்கு மஹா கும்பாபிஷேகம் நடைபெற்றது.

ஸ்ரீ அழகிய நாச்சியம்மன் துணை.

# ஸ்ரீ துர்க்காதேவியின் 23 திருநாமங்கள்

துர்கா துர்கார்திசமநீ துர்காபத்வி நிவாரிணீ
துர்கமச்சேதிநீ துர்காஸாதிநீ துர்கநாசிநீ
துர்கதோத்தாரிணீ துர்கநிஹந்த்ரீ துர்கமாபஹா
துர்க மஜ்ஞாநதா துர்கதைத்ய லோகதவாநலா
துர்கமா துர்கமாலோகா துர்காத் மஸ்வரூபிணி
துர்கமார்கப்ரதா துர்கமவித்யா துர்கமாச்ரிதா
துர்கமஜ்ஞா நஸம்ஸ்தாநா துர்கமத்யாந பாஸிநீ
துர்கமோஹா துர்கமகா துர்கமார்த்த ஸ்வரூபிணி
துர்கபீமா துர்கபாமா துர்கபா துர்க தாரிணீ.

## துதிகள்

அம்பா ரௌத்ரிணி பத்ரகாளி பகளா
ஜ்வாலாமுகி வைஷ்ணவீ!

ப்ரஹ்மாணி த்ரிபுராந்தகி ஸுரநுதா
தேதிப்ய மனோஜ்வலா!

சாமுண்டேஸ்வரீ ரக்ஷபோஷ ஜனனீ
தாக்ஷாயணீ வல்லப!

சித்ரூபி பரதேவதா பகவதீ
ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி!

நித்யா நந்தகரீ வராபயக்ரீ
ஸௌந்தர்ய ரத்னாகரீ!

நிர்தூதகில கோர பாவனகரீ
ப்ரத்யக்ஷ மஹேஸ்வரீ!

ப்ராலேயாசல வம்ச பாவனகரீ
காசி பூராதீஸ்வரீ!

பிக்ஷாந்தேஹி க்ருபா வலம்பனகிரி
மாதா அன்ன பூர்ணேஸ்வரீ!

## குங்குமத்தின் பெருமை

குங்குமமாவது குறைகளைத் தீர்ப்பது!
குங்குமமாவது குடியினைக் காப்பது!
குங்குமமாவது குணமது அளிப்பது!
குங்குமமாவது கொல்வினைத் தீர்ப்பதே!

நோயினைத் தீர்ப்பதும் நுண்ணறி யீவதும்
பேயினைத் தீர்ப்பதும் பெரும்புகழ் ஈவதும்
சேயினைக் காப்பதும் செல்வம் தருவதும்
தாயினை அருச்சித்த குங்கும மாமே.

சக்தி கொடுப்பதும் சத்தியம் கார்ப்பதும்
பக்தி அளிப்பதும் பரகதி ஈவதும்
முக்தி கொடுப்பதும் மும்மலம் தீருவதும்
சித்தி தருவதும் குங்குமமாமே

சிவசிவ என்றுமே திருநீரணிந்தபின்
தவமான மேலோருந் தரித்துக் களிப்பதும்
சிவகாமியே என சிந்தித் தணிவதும்
பலவினை தீர்ப்பதும் குங்குமமாமே.

அஷ்டலெக்ஷ்மி அருள் தந்தளிப்பதும்
இஷ்டங்களீவதும் ஈடற்ற குங்குமம்
கஷ்டம் தவித்தென்னை காத்தருள்வதும்
அஷ்டஸ்ரீ சக்ர குங்குமமாமே.

## காமாக்ஷி துதி

மங்கள ரூபிணி மதியணி சூலினி
மன்மத பாணியளே!
சங்கடம் நீக்கிடத் சடுதியில் வந்திடும்
சங்கரி சௌந்தரியே!
கங்கண பாணியன் கனிமுகம் கண்டநல்
கற்பக காமினியே!
ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி
துக்க நிவாரணி காமாக்ஷி.

பஞ்சமி பைரவி பர்வத புத்திரி
பஞ்ச நல் பாணியளே!
கொஞ்சிடும் குமரனைக் குணமிகு வேழனைக்
கொடுத்த நல் குமரியளே
சங்கடம் தீர்த்திடச் சமரது செய்தநல்
சக்தியெனும் மாயே
ஜெய ஜெய சங்கரி கௌரிக்ருபாகரி
துக்க நிவாரணி காமாக்ஷி

ஜெய ஜெய பாலா சாமுண்டீஸ்வரி
ஜெய ஜெய ஸ்ரீதேவி
ஜெய ஜெய துர்கா! ஸ்ரீபரமேஸ்வரி
ஜெய ஜெய ஸ்ரீதேவி
ஜெய ஜெய ஜெயந்தி மங்கள காளி
ஜெய ஜெய ஸ்ரீதேவி
ஜெய ஜெய சங்கரி கௌரி க்ருபாகரி
துக்க நிவாரணி காமாக்ஷி.

# அபிராமி துதி

மனிதரும் தேவரும் மாயா முனிவரும் வந்துசென்னி
குனிதரும் சேவடிக் கோமளமே கொன்றை வார்சடைமேல்
பனிதரும் திங்களும் பாம்பும் பகீரதியும் படைத்த
புனிதரும் நீயும் எந் புந்திஎந் நாளும் பொருந்துகவே.

நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்பதுன்னை.
என்றும் வணங்குவ துன்மலர்த் தாள் எழுதாமறையின்
ஒன்றும் அரும் பொருளே! அருளே! உமையே! இமயத்து
அன்றும் பிறந்தவளே அழியா முக்தி ஆனந்தமே.

பூத்தவளே புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம்
காத்தவளே பின்காந்தவளே! கறைந் கண்டனுக்கு
மூத்தவளே! என்றும் மூவா முகுந்தற்கு இளையவளே!
யாத்தவளே! உன்னை யன்றி மற்றோர் தெய்வம் வந்திப்பதே!

தனம் தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வறியா
மனம்தரும் தெய்வம் வடிவும்தரும் நெஞ்சில் வஞ்சமில்லா
இனம்தரும் நல்லனஎல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே.
கனம்தரும் பூங்குழலாள் எங்கள் அபிராமி கடைக்கண்களே.

ஆத்தாளை எங்கள் அபிராமவல்லியை அண்டமெல்லாம்
பூத்தாளை மாதுளம்பூ நிறத்தாளைப் புவியடங்கக்
காத்தாளை அங்குசபாசம் குசுமம் கரும்புமங்கை
சேர்த்தாளை முக்கண்ணியைத் தொழுவார்க்கொரு தீங்கில்லையே!



# ஸ்ரீ அழகிய நாச்சியம்மன் துதி

## ஸ்ரீ விநாயகர் துதி :

திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுரை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்

(கந்த புராணம்)

## ஸ்ரீ சேவுகப்பெருமாள் துதி :

பொற்குப்பையேறி வடமேரு வாகப் பொலிதலென
நெற்குப்பையேற விளைதரு மாவள நீள்வயல்சூழ்
நெற்குப்பை மாநகர்காவல் கொண்டாளு நிருபநெஞ்சத்
திற்குப்ப லங்கொடுத் தாணமருந் தூர்வளர் சேவகனே !
மாயாத வஞ்சகத் தீயரைநேய மறந்தவரை
ஈயாவுலோபரை இன்னல் செய்தாரை மகிழ்ந்தவரை
வாயாற் குருதியைக் கக்கிடச் சூலம் வழங்கிடுவாய்
சேயாயெனைப்புரந் தாண்மருந்தூர் வளர் சேவகனே

( சேவுகமாலை : பைரவ பாரதி
நெற்குப்பை

காணிக்கை தருவார் கன்னியே போற்றி
மாணிக்க வல்லியே மகராசி போற்றி
அற்புதக் கனியே அன்னை போற்றி
நெற்குப் பைவளர் நிமலை போற்றி
நல்லன நாடுவார் நாயகி போற்றி
அல்லன நாடுவார்க் கரியாய் போற்றி
நெல்லைப் பதிவாழ் நீலியே போற்றி
வல்லமை தந்தருள் வராகி போற்றி
புலன்பொறிக் கமுதாம் போதமே போற்றி
நலந்தரும் சிறப்பெலாம் நல்குவாய் போற்றி

# பொன் மொழிகள்

1 அரசனாயினும் உழவனாயினும் தன் வீட்டில்
அமைதியைக் காண்பவனே தலைசிறந்த மகிழ்ச்சி
யுள்ளவன் — கெதே

2 தெளிந்த சிந்தனையும் கண்ணோட்டமும் உள்ள
ஒரு நண்பனைப் பெற்றவன் தன் அறிவாற்றல்களை
இரட்டிப்பாக்கி கொண்டவனாவான் — ராபர்ட்ஹால்

3 கள்ளத் தனத்தை விட்டுவிட்டால் ஒருவன்
பேரின்ப வெள்ளத்தில் திளைக்கலாம் — வள்ளலார்

4 பட்டுத்தெரியாத அறிவு ஏந்திவைக்க பானையில்
லாத தண்ணீரைப்போல் பயனற்றுப் போகும்
— சீனப் பழமொழி

5 இறைவனை வழிபடும்போது அவனுக்காகமட்டும்
வேண்டிக் கொள்வது சரியல்ல. இந்த உலகம்
எல்லாம் வாழும்படி வேண்டிக் கொள்ள
வேண்டும். ஏனெனில் அதில் அவனுக்கு
வேண்டிய எல்லாம் அடங்கி யிருக்கின்றன — வள்ளலார்

6 ஒருகாலத்தில் பகையாய் இருந்து பின்
நண்பனாக மாறியவனிடம் விழிப்புடன் இருங்கள்
— பிரெஞ்சு பழமொழி

7 கோழைமையும் பகைமையும் அச்சமும் குடி
கொண்டுள்ள இடத்தில் இறைவன் தோன்றுவதில்லை
— ராமகிருஷ்ணர்

8 வேலை செய்வதில் அவசரமும் கூடாது,
இடையில் இளைப்பாறுவதும் கூடாது. — கெதே

9 முயற்சியும் தன்னம்பிக்கையும் நிறைந்தவர்களுக்கே
நேரம் இரு கரங்களையும் தூக்குகிறது. — மண்ட்

10 செல்வம் நிறைந்தவனாக வாழ முதலில் வேண்டியது
நிறைந்த உள்ளம், இரண்டாவது தான் பணம்.
— R. L. ஸ்டீவன்ஸன்

11 அறிவின்மையை அதிகமான சிரிப்பொன்றே
காட்டி விடும். — கோல்டுஸ்மித்

12 உனக்குத் தெரியாத ஒன்றைத் தெரியாது என்று
ஒப்புக் கொள்வதற்குப் பெயர்தான் அறிவு.
— கன்ஃபூசியஸ்

13 உழைப்பில்லாத சோம்பேறிகளே நாளை நாளை
என்பார்கள் — விஸிஸ்

14 முட்டாள் அதிகம் சிரிப்பான், வஞ்சகன்
சிரிக்கவே மாட்டான் — புல்வர்

15 பொய் சொல்வதற்குத் தேவையானது சிறந்த
நினைவாற்றல். — குயின்தாலின்

16 அளவுக்கு மீறி நல்ல காரியங்களைச்
செய்தால் அது தவருகப்படும். — சர்ச்சில்

17 பணிவு இருந்தால்தான் வாழ்க்கையில் விரைவில்
வெற்றி பெற முடியும்.

18 இருளைப் போக்குவது சூரிய ஒளி, மனதின்
இருளைப் போக்குவது அறிவின் ஒளி.

19 குலப் பெருமையைக் காட்டிலும், குணப்
பெருமை சிறந்தது.

20 தொத்து நோயை விட கொடியது
சூதாட்டக் காரன் நட்பு

21 நம்பிக்கையும் முயற்சியுமே தான் காமதேனு
கேட்ட தெல்லாம் தரும்.

22 உழைப்பின்றி உண்பவன் திருடனுக்கு ஒப்பாகும்.
23 செல்வத்தை சேர்ப்பது மதி, சேர்வது விதி.
— கருணனந்தம்

## சிந்தனைக்கு விருந்து

பாவம் செய்யும் ஒருவனைப் பார்த்து நீ அடுத்த ஜன்மத்தில் மிருகமாய்ப் பிறப்பாய் என கூறுகிறோம். ஆனால் இப்பிறப்பிலேயே நாம் பலவித மிருகங்கள் போல் நடந்து கொண்டிருப்பதை யாரும் அறிவதில்லை. கருத்தில் தெளிவும் எந்தெந்த குணங்களையுடையவர்கள், எந்தெந்த மிருகங்கள், பறவைகளுக்குச் சமமானவர்கள் யார் யார் என்பதை இங்கு தெளிவாக எடுத்துக்காட்டப் பட்டுள்ளது.

1 வஞ்சனை சூதுகள் புரிந்து கபடநாடகம்
ஆடுபவன் — நரி




2 ஊக்கமின்றி ஏதேனும் ஒன்றையே நினைத்து மனம் சோர்ந்து தலைகவிழ்ந்து உட்கார்ந்திருப்பவன் — தேவாங்கு

3 மறைந்திருந்து பிறருக்கு தீங்கு செய்பவன் — பாம்பு

4 புகழில் விருப்பமின்றி அற்ப சுகத்தில் மூழ்கிக் கிடப்பவன் — பன்றி

5 பிறருக்குப் பிரியமாக நடந்து கொண்டு அவர்கள் கொடுப்பதை வாங்கித்தின்று வயிற்றை வளர்ப்பவன் — நாய்

6 எடுத்ததற்கெல்லாம் திடீர் திடீரெனக் கோபப்படுபவன் — வேட்டை நாய்

7 தன் அறிவுத் திறத்தினுல் புதியவற்றை அறிந்துகொள்ளாமல் முன்னோர் சொல்லிய வற்றையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பவன் — கிளி

8 பிறர் தன்னை எவ்வளவு அவமதிப்பாக நடத்தியபோதிலும் அவன் புரியும் அக்கி ரமச்செயலை நிறுத்த முற்படாமல் தனது மந்த குணத்தால் அவற்றைப் பொறுத்துக் கொண்டிருப்பவன் — கழுதை

9 தன்னிடம் ஒன்று மில்லாமல் வெளிக்குப் பகட்டாக திரிபவன் — வான்கோழி

10 தான் சிரமப்படாமல் பிறர் பொருளை அபகரித்து உண்பவன் — கழுகு

11 ஏற்றுக் கொள்பவற்றை ஏற்றுக்கொள் ளாமல் அதைக்கண்டு வெறுப்படைபவன் — ஆந்தை

12 உண்மையையே ஒவ்வொரு நிமிடமும் பேசி தர்மத்தை ஆதரித்து பரம்பொருளை அறிய முற்படுபவனே — மனிதன்

வேலவன் பிரஸ், வடக்குச் சித்திரை வீதி, மதுரை-625001.